# எழில் விருத்தம்

புதுமைக் கவிஞர்
கவிஞரேறு
வாணிதாசன்

திருக்குறள் பதிப்பகம்
66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர் நகர்,
சென்னை - 600 078.

# உள்ளுறை

சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள்
ஆராய்ச்சி விரிவுரையாளர்,

திரு. **க.த. திருநாவுக்கரசு** M.A., (தமிழ்),
M.A.,(வரலாறு), M.Litt., மொழியியல் (Dip).,
அவர்கள் அளித்த

# *அணிந்துரை*

தமிழகத்தின் மறுமலர்ச்சிக் கவிஞர்களுள் முதிர்ந்த அறிவும், கனிந்த அனுபவமும் பெற்று விளங்குபவர் கவிஞர் திரு. வாணிதாசன். அவர் பாரதிதாசன் காட்டிய புதிய வழியில் கற்றாரும் மற்றாரும், துடிக்கும் இளைஞர்களும் தொண்டு கிழவர்களும், நடிகர்களும் நாடாளும் நாவலர்களும் படித்து இன்புறத்தக்க எழில்மிக்க கவிதைகளை இனிய தமிழில் ஏற்றமுறப் பாடி வருகிறார் பன்னெடுங்காலமாக.

அவருடைய பாடல்களில் பைந்தமிழின் பசுமையையும், செந்தமிழின் செழுமையையும், தென் தமிழின் தெவிட்டாத தேனினிப்பையும், தண்டமிழின் தண்மையையும், கன்னித் தமிழின் கனியாத இளமையையும், புதுமைத் தமிழின் புதுப் பொலிவையும் தமிழ் கூறும் நல்லுலகம் கண்டு, வியந்து போற்றி வருகிறது.

பண்டைத் தமிழ்மரபின் வழிவந்த பாவலர் வாணிதாசனார், பழைய தமிழின் பயன்மிகு பண்புகளை 'விண்வெளி ஆராய்ச்சிக்குகந்த' இன்றைய தமிழில் நம் இதயங்களைக் கவரும் வண்ணம் குழைத்துத் தருவதில் தன்னிகரற்று விளங்குகின்றார். அவர் மரபுவழிக் கவிஞர்! எனினும், பழைமைப் பாசறையின் காவலர் அல்லர்!

'' புதியன கண்டபோழ்து விடுவரோ
புதுமை பார்ப்பார் ''

என்றதற்கிணங்கப் புதுவையைச் சேர்ந்த புலவர் வாணி தாசனார் புதுமைக் கவிஞராக - புரட்சிக் கவிஞரின் மதிப்பிற்குரிய மாணவராக மாண்புற்று விளங்குகிறார்.

அவருடைய கவிதைகளில் விண்ணைத் தீண்டித் தழுவும் மேகங்களை நாம் காணலாம்; இடியின் அதிர்ச்சி தரும் குரலைக் கேட்கலாம்; கண்ணைப் பறிக்கும் மின்னல் தோன்றி மறைவதைப் பார்க்கலாம்; மெல்லிய பூங்காற்று மெல்ல வீசுவதை உணரலாம்; வையத்தை வாழ வைக்கும் வான்மழை பையப் பெய்வதைப் பார்த்து மகிழலாம்.

வாணிதாசன் அவர்களுடைய கவிதையில் உலக உண்மைகள் உயிர்பெற்று உலவுகின்றன. போலி உணர்ச்சிகள் தோன்றுவதில்லை.

காதற் கவிதையானாலும், வறுமையின் கொடுமையை உள்ளமுருகச் சித்திரிக்கும் பாடலானாலும் அதில் நாம் ஓங்கி ஒளிவீசும் ஓர்

ஆன்மீக உணர்வு இழையோடிச் செல்வதைக் காணலாம்.

கவிஞரின் புதிய புதிய அனுபவங்கள், புதிய புதிய மொழி மின்னல்கள் அவருடைய கவிதைகளில் தவழ்ந்து வருவது இயல்பு. அறிவுக் கொவ்வாத-ஆராய்ச்சிக்குப் பொருந்தாத போலிக் கற்பனைகளோ, உணர்ச்சியற்ற வருணனைகளோ வாணிதாசரின் கவிகளில் காண்பதரிது.

இன்றுவரை அவர் பதின்மூன்று கவிதைப் படைப்புகளைத் தமிழ் அன்னைக்கு அழகுறு அணிகளாக அணிந்து மகிழ்ந்துள்ளார். இப்பொழுது வெளிவரும் 'எழில் விருத்தம்' அவருடைய பதினான்காவது படைப்பாகும்.

கவிஞன் எங்கெங்கும் எழிலைத்தான் காணுகிறான்; கண்டு மகிழ்கிறான்; 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற பரந்த மனப்பான்மையுடன் அதைப் பாட்டிலே பாங்காக வடித்துக் தருகிறான்.

'கைபுனைந்து இயற்றாக் கவின்பெறுவனப்பு' என்று பாராட்டப் பெறும் இயற்கை யெழிலையும், விந்தை மனிதன் படைத்த செயற்கையெழிலையும் நம் கவிஞர் சொல்லோவியமாகத் தீட்டும் திறம் வியப்பூட்டுவதாகும்.

கருத்துச் செறிவோடு கூடிய இனிய, எளிய சொற்களின் மூலம், 'இழும்' எனும் ஓசை நயம் பெற்று இந்நூல் வீறுடன் விளங்குகிறது.

'விருத்தப்பா' என்பது தமிழ்மொழியின் பாவகைகளுள் காலத்தால் பிற்பட்டது. எனினும், அதனுடைய மூல வடிவத்தைச் சிலப்பதிகாரத்தின் வரிப்பாடல்களில் நாம் காண்கின்றோம். அது தேவார, திவ்வியப் பிரபந்தங்களில் வளர்ச்சியுற்றுக் கம்பனுடைய இராமாவதாரத்தில் முழுநிறை வடிவத்தைப் பெற்றிருக்கிறது.

பண்டைத் தமிழின் யாப்பிலக்கணத்திலிருந்து கிளைத்துப் பின்னர் வடமொழி இலக்கண மரபைச் சார்ந்து செழித்து வளர்ந்த சிறப்புடையது விருத்தப்பா. கம்பனுக்குப் பிறகு தோன்றிய புலவர்கள் பெரும்பாலும் விருத்த யாப்பிலேயே தங்கள் அரும்பெரும் நூல்களை இயற்றியுள்ளனர்.

நால்வகைப் பாவிலும், அவற்றின் இனங்களிலும் பல்வேறு பாட்டுக்களை இயற்றிய நம் கவிஞர், உள்ளத்தைக் கவரும் விருத்தமெனும் ஒண்பாவில் பன்னிரண்டு தலைப்புக்களில் இயற்றிய நூற்றிருபது பாட்டுக்களின் தொகுப்பாக 'எழில் விருத்தம்' என்னும் இந்நூலை நமக்கு அளித்துள்ளார்.

இந்நூலின் பெயரும், அதில் பயன்படுத்தப் பட்டுள்ள யாப்பும் அவர் 'மரபுவழிக் கவிஞர்' என்பதைச் சொல்லாமற் சொல்லுகின்றன.

இத்தொகுப்பிலுள்ள பாடல்களுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு. எண்பத்தைந்து (கி.பி.1885) ஆண்டுகளுக்கு முன்பு திரு.தி. வீரபத்திர முதலியார் பி.ஏ., பி.எல்., அவர்களால் இயற்றப்பட்ட "விருத்தப்

பாவியல்'' என்னும் இலக்கணத்தில் வகுத்துத் தரப்பட்டுள்ள விருத்தப்பாவின் இலக்கணத்திற்கு ஏற்பக் கவிஞர் வாணிதாசன் தம்முடைய கவிதைகளை இயற்றியுள்ளார். இதை, அவர் ஒவ்வொரு பாடலின் முடிவிலும் விருத்தப் பாவியலின் இன்ன விதிபற்றி இயற்றப்பட்டுள்ள தெனத் தெளிவுறுத்தியுள்ளமையால் நாம் அறிகிறோம்.

முதன்முதலாக விருத்தப்பாவின் இலக்கணத்தை விரித்துக் கூறுவதற்காக இயற்றப்பட்டது 'விருத்தப்பாவியல்' என்னும் இலக்கண நூலாகும். அதை இயற்றிய ஆசிரியர், தாம் வகுத்த விதி களுக்குத் தம்முடைய நூற்பாக்களையே எடுத்துக் காட்டாகக் கொள்ளுமாறு கூறியிருக்கிறார்.

வேறு இலக்கிய எடுத்துக்காட்டுக்களையோ, இவ்விதிகளுக்கேற்பத் தாமே புதிதாகப் புனைந்த செய்யுள்களையோ அவர் எடுத்துக்காட்டாகக் காட்டிச் செல்லாக் குறையை, நம் கவிஞர் போக்க முனைந்துள்ளார். அவருக்குத் தமிழ் உலகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

இயற்கை அழகினைப் போற்றிப் பாடுவது தொன்று தொட்டு இலக்கிய மரபாக இருந்து வருகிறது. அன்றைய வாழ்க்கைமுறை இயற்கை யோடு இயைந்து வாழ வேண்டிய ஒன்றாக அமைந்திருந்தது. ஆனால், இன்றோ இயற்கையோடு இயைந்து வாழ முடியாத அவல நிலையன்றோ பெருகிவருகின்றது!

நம்முடைய கவிஞர் இயற்கை அன்னையின் மடியில் மறைந்திருக்கும் அரிய பொருள்களின் சீரையும் சிறப்பையும் நம் மனக்கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்துவதில் வல்லவராக விளங்குகிறார். இரண்டோர் எடுத்துக்காட்டுக்களைப் பார்ப்போம்:

"உண்ணத் தெவிட்டா இயற்கை
ஓவியப் பேரெழில் சோலை!" — 6:3

"சொல்லில் வல்லவர் பேருரை நயம்போல்
தொடர்ந்து வீழ்ச்சியாய் மாறினாய்"— 12:2

"பொன்பூத்த கருவானம்
பொலிவற்றுப் போகும்" — 10:2

"பொங்கிச் சீறி அலையெழுப்பிப்
போரைச் செய்யும் கடல்" — 2:5

கவிஞர் வாணிதாசன் இயற்கையை இயற்கை அழகின் இன்பத்திற்காகவே சிறப்பித்துப் பாடுவதோடு அமையாது, இயற்கை அழகை வாழ்க்கைப் போருக்குப் பயன்படுத்தியும் பாடியுள்ளார். இத்தகைய பாடல்களில் கலையழகு கவினுற்று விளங்குகிறது. அதனுடன் நிகழ்வியல் பாங்கும் (Realisam), இன்றைய வாழ்வியல் நிலையும் இணைந்தும் இழைந்தும் காணப்படுகின்றன.

"பாயும் செவ்வொளி மறைந்திட மறைந்திடு
பகலவன் வழிநோக்கித்
தேயும் திங்களும் வழியினைக் கூட்டியே
திரும்புவோர் செயல்போலச்
சாயும் செங்கதிர் போய்விழ" — 4:8

"கூலி ஆட்களின் கொதிமனம் போலொளி
குன்றிய குளிர்மாலை! — 4:9

"குந்தி அன்னை குளிர்கால் சுவைக்கக்
குழந்தை மணல்தோண்டச்
சிந்தும் கிளிஞ்சல் சிறுவர் பொறுக்கத்
திரைகால் உடல்நனைக்க
முந்தும் அலைகள் கரையைத் தாவி
மோதி முரசார்க்கச்
சிந்தைக் கின்பம் வாரி வழங்கும்
திரைபாய் கடலோரம்!" — 7:4

"வழியினில் கண்ட மண்வளம் யாவும்
வணிகனைப் போலுடன் ஈட்டிக்
கொழித்தனை மருதம்" — 8:3

"அறிவிலா மக்கள் அணுகிய போதும்
அவரவர் கீழ்மையை மாற்றும்
அறிவுடை யான்ற மேலவர் போல
அணுகிய கழிவு நீர் யாவும்
நெறியொடு மாற்றி நீர்மையைத் தேக்கி" — 8:7

கவிதைக்குக் கற்பனை கண்களைப் போன்றது. "உயர்ந்த உணர்ச்சிகள் ஊற்றெடுப்பதற்குரிய சிறந்த நிலைக்களன்களைக் கற்பனை மூலம் அமைத்துத் தருவதே கவிதை என்பர்.

கவிஞனுடைய உள்ளத்தை நிழற்படம் போல படம் பிடித்துக் காட்டும் ஆற்றலுடையது கற்பனை.

கற்பனையின் சிறப்புக்கு உறுதுணையாக விளங்குவன உவமை உருவகம் போன்ற அணிகள்.

அவற்றோடு 'நயமிகு சொல் வடிவம்' (Image) ஐம்பொறிகள் வாயிலாக ஒருவன் நுகர்ந்து பெறத்தக்க கருத்துக்களை உணரச் செய்யும் ஆற்றலுடையது. இவ்வியல்புகள் கவிஞர் வாணிதாசனாருடைய கவிதையில் நிறைந்து ஒளிர்கின்றன.

"காக்கைநிற நள்ளிரவே" — 11:7

"குளத்தினிலே தாமரைகள்
தமிழ் மன்னர் கூட்டம்!" — 10:5

"தைத்திங்கள் குளம்பூத்த பூவோ விண்மீன்?
தமிழ்வேந்தர் வெளியிட்ட சின்னக் காசோ? — 9:2

"சோலையாம் கோட்டையின் உள்ளே
தூண்களாம் மா பலா தென்னை" — 6:7

".....தனிமனிதன் நல்வாழ்வு
சரியும் என்றே
அழைப்பளித்தே பாழடைந்த
கோட்டைமதில் அறிவுறுத்தும்" — 3:5

"ஒன்று கேட்பேன்: கோட்டான் போல்
உனக்குப் பகலில் கண்குருடோ?" — 2:2

இத்தகைய சிந்தைக்கினிய சொற்சித்திரங்களைத் தீட்டியுள்ள கவிஞரின் பாடல்களைப் படிக்கின்ற பொழுது உணர்ச்சி பொங்கியெழுவதை, இழுமெனும் ஒலிநயம் நம்முடைய காதுகளில் எதிரொலிக்கின்றது. இவற்றோடு தமிழ்மொழிப் பற்றும், தாய்நாட்டின் பற்றும் 'எழில் விருத்தத்தில்' ஏறுநடை போட்டுச் செல்லுவதை நாம் கண்டு மகிழலாம்

சொல் நோக்காலும் பொருள் நோக்காலும், தொடை நோக்காலும், நடை நோக்காலும் நனிசிறந்து விளங்கும் இன்றமிழ் இலக்கியம் 'எழில் விருத்தம்'. இதை இயற்றியதன் மூலம் புதிய தமிழ் இலக்கியக் கருவூலத்தை வளமுறச் செய்த கவிஞர் வாணிதாசனாரின் செந்தமிழ்த் தொண்டு சிறப்புறத் தமிழ் மக்கள் துணை நிற்க வேண்டுகின்றேன்!

சென்னை-2
8.8.1970

*க.த. திருநாவுக்கரசு*



# பதிப்புரை

"பாரதியார், பாரதிதாசர், வாணிதாசர் ஆகிய இந்த மூவரும் மூன்று விதமான தன்மையில் கவி புனைந்திருக்கின்றனர். பாரதியார் அந்தக் காலத்துக்கு ஏற்ப இந்திய மக்களின் சுதந்தர உணர்ச்சியினைத் தட்டி எழுப்பும் வகையில் பாடினார். பாரதிதாசரின் பாடல்கள் பெரும்பாலும் சீர்திருத்த நோக்குடையன. வாணிதாசனார் அவர்களோ இந்த இருவரினும் விஞ்சிய வகையில் உலக நிகழ்ச்சிகள், இயற்கைத் தோற்றங்கள் முதலிய பலவற்றையும் உள்ளூர நினைந்து பார்த்து உளமுருகிப் பாடி வருகின்றார். இவரிடம் பிற புலவர்களுக்குத் தோன்றாத புத்தம் புதிய கருத்துக்களை எல்லாம் நிரம்பக் காணலாம்."

புதுமைக் கவிஞர் வாணிதாசனார் மேற்காட்டிய முன்னோர் மொழி பொருளுக்கேற்பத் தூய தீந்தமிழை வளர்த்து வருகிறார். அவருடைய பதினான்காவது படைப்பாகிய 'எழில் விருத்தம்' என்னும் இந்நூல், இயற்கையின் எழிலோவியமாகவும், இலக்கணத்தை விளக்குவதாகவும், வளர்ந்து வரும் புதுக் கவிஞர்களுக்கு ஊன்று கோலாகவும், கைவிளக்காகவும், வழிகாட்டியாகவும் விளங்குகின்ற.

இன்று இவரைப் போல் எளிய சொற்களால் உயர்ந்த கருத்துக்களை நெஞ்சை அள்ளும் வகையில் தெள்ளு தமிழ் நடையில் உள்ளுதொறும் உணர்வாகும் வண்ணம், பாலொடு தேன் கலந்தாற் போலச் சுவையாகத் தருபவரைக் காண்டல் அரிதே!

'மூர்த்தி சிறிது எனினும், கீர்த்தி பெரிது' என்பது போல, இந்நூல் பன்னிரு தலைப்புக்களில் நூற்றிருபது பாடல்களைக் கொண்டதெனினும், கம்பர் பாடிய பன்னீராயிரம் பாடல்களையும் விழுங்கிவிடுகிறது.

தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார் தம்முடைய பாடலைக் குறித்துச் சீட்டுக் கவியில், 'சுவை புதிது, பொருள் புதிது, வளம் புதிது, சொற் புதிது, சோதி மிக்க நவகவிதை, எந்நாளும் அழியாத மா கவிதை' எனத்தாமே பாடியிருப்பினும், அது நம் புதுமைக் கவிஞர் வாணிதாசனை உளங்கொண்டு 'தீர்க்கதரிசன' மாகப் பாடியதாகவே கொள்ள வேண்டியிருக்கிறது.

புதுமைக் கவிஞரின் 'எழில் விருத்தத்' தைக் கற்பவர்க்கு நுழைவாயிலாக ஒரு சில எடுத்துக் காட்டுதும் :

ஊரினைக் காக்கும் வீரன் ஒப்பவே ஓசை காட்டும் '**மணிக் கூண்டி**'னைத் தாய்க்கும் மாமிக்கும் ஒப்பிட்டுக் காட்டும் திறன் சுவைக்கும் தன்மையதாகும்.

'சுழல் விளக்கை' விளக்குங் கவிஞர், கோட்டானைப் போல் உனக்கும் பகலில் கண் குருடோ?' எனக் கேட்கின்றார். அது பகலில் ஒளி வீசாத் தன்மையைக் காட்ட.

அடுத்து நம் கவிஞர் தமிழ் மன்னன் வேல் நுனியை, மறத்தோளைக், குறுநிலத்தைக் கூறாநிற்கும் '**கோட்டை**'யை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றார். 'தனி மனிதன் நல்வாழ்வு சரியும் என்றே கோட்டை மதில் அறிவுறுத்தும்' செய்தியைக் கூறுங்கால், 'நினைவில்லாத் தாயகத்தின் நிலையெண்ணா மக்கட்கே நித்தம் நித்தம் மலைக் கோட்டைக் கற்சுவரே! கருத்தை ஊட்டே!' என்று சுழறும் வகையில் தமிழனுக்குத் தன் வரலாற்று அறிவு வேண்டும் என்பதை இடித்துக் கூறும் செவியறிவுறூஉந் தன்மை நீடு நினையத்தக்க ஒன்றாகும்.

'**மாலை**'யில் காணும் ஒவ்வொரு பாமலரும் தமிழ் மணம் வீசி அடுத்தடி வைக்க வொட்டாமல் தடுத்து நிறுத்துகின்றது. மாலையூட்டும் மாலையாக அமைந்துள்ளது மாலை என்றுதான் சொல்லத் தோன்றுகின்றது.

'கூலியாட்களின் கொதி மனம் போல் ஒளி குன்றிய குளிர்மாலை' என்பதில், தொழிலாளர் துயர் துடைக்கத் துடிக்கும் கவிஞரின் தொண்டுள்ளத்தைக் கண்டிடலாம்.

மாலையைக் காட்டும் கவிஞரின் திறனுக்கும் பொன் மாலை சூட்டத் தமிழறிந்த முன்னாள் தமிழறிஞன் இல்லையே என்ற ஏக்கந்தான் ஏற்படுகின்றது!

'சேவலின்' கொண்டையைக் குறிக்கும் கவிஞர் கொள்ளி நுனி எரி தீயையும், கொம்பிடைப் பூத்த செம்பூவையும் ஒப்பிடுகிறார். அதன் விரல்கள் மஞ்சள் கிழங்கினையும், விரலிடைக் காணும் முள் நாணல் முளையினை நறுக்கிய துண்டினையும் ஒத்திருப்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

உற்று நோக்கி ஒரு பொருளை உவமையாகக் காட்டும் திறன் சங்க இலக்கியப் புலவர்களின் புலமையை நினைவூட்டுவதாயிருக்கிறது.

'தன் முன் புறமுதுகிட்ட சேவலைத் தாக்குமோ சேவல்!' என்று கவிஞர் நம்மைக் கேட்கின்றார். இதனால் சேவற் போரினை எவ்வளவு உன்னிப்பாகக் கவிஞர் பார்த்திருக்கிறார் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது. அடுத்தது 'சோலை'

அதனுள் நுழையும் போதே குளிர்மை தோன்றுகிறது. சோலைப் புதுப்பெண்ணைக் காண்பதற்காக மாமலைவிட்டு மாலைக் கதிரொளி மங்கும் வேளையில் மாமணத் தென்றலாகிய தலைவன் வருவதைக் காணும்போது உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளுநடை போடுகின்றது.

கிளிக்கு மாவின் இலையை ஒப்புமை கூறியுள்ள புதுமையைக் கண்டு இன்புறாமல் இருப்பதற்கில்லை!

செவ்வந்திப்பூ, அந்தி விளக்கினைப் போல அலர்ந்தது எனக் காட்டுகின்றார்.

கொல்லன் உலைக்களத்தில் காணும் செந்தீப் போல இலவு பூத்தது என்கிறார்.

'நொந்த உளத்தினை மாற்றும் நுழைபுலத்தோர் ஒக்கும் சோலை' எனச் சோலையைப் புலவர்க்கு ஒப்புமை கூறியுள்ள நயம் பாராட்டற்குரியதாகும்.

'கடலோரக்' காட்சியைப் படம் பிடித்துக் காட்டும் புதுமைக் கவிஞர் வாணிதாசனார், இளங்கோவடிகளாரின் கானல் வரியை விஞ்சுகிறார்.

கடலோரத்தை நாட்டைக் காக்கும் வீரன் எனவும், நெய்தல் நிலத்தின் அரண் எனவும் குறிப்பிடுகின்றார்.

'கூறு கூறாய்', 'உப்பிட்டுலரும்', 'திரை மேல் சென்றோன்' என்று தொடங்கும் பாடல்களைப் படிக்குந்தோறும் படிக்குந்தோறும் ஓசைநயமும், பொருளழகும், சொல்லழகும் நனிசிறந்து விளங்கக் காணலாம்.

'ஆற்றில்' பொதுப்பொருளால் சிறப்புப் பொருளையும், சிறப்புப் பொருளால் பொதுப் பொருளையும் விளங்க வைத்தலான வேற்றுப் பொருள் வைப்பணியைக் கவிஞர், 'அழிந்தனை

ஆறே! அலைகடலுலகில் அழிவது பிறப்பதின் வித்தாம்' என அமைத்துக் காட்டியுள்ளார். இஃது இயற்கையின் செயலையும் தத்துவ விளக்கத்தையும் எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ளது.

'நீர்மையைத் தேக்கி நின்கரை புதுமையால் விளைந்த பொறியினை இயக்கி மின்விசை நல்கிப் புரந்தனை ஆறே' என்னும் அடிகளில், தற்கால விஞ்ஞானப் புதுமையின் விளைவையும் தம் பாடலில் மிளிரச் செய்திருப்பதை அறிபவர் இவர் புதுமைக் கவிஞரே என்பதை நன்கு உணர்வர்.

'விண்மீனி'ல் இந்நாளளவும் வேறெவரும் எடுத்துக் காட்டாத அளவுக்கு ஒப்புமைப் பொருளை மிக மிகப் பொருத்தமாக அமைத்துள்ள அழகைக் கண்டு மகிழலாம்.

கதிரவன் வருகையால் தாமரையும், திங்கள் வருகையால் அல்லியும் மலர்வதாகப் புலவர்கள் பாடியுள்ளார்களே, அவ்வாறே விண்மீன்களின் தோற்றத்தினால் விரியும் பூக்களை விளம்பாததைக் கண்ட கவிஞர், அதனையும் ஆராய்ந்து பார்க்குமாறு அறிவுக்கு வேலை கொடுத்துள்ளார். தாவர ஆராய்ச்சியாளர்க்கு இஃதோர் நல்விருந்தாகும்.

'நல்லுழவன் இன்றேல் வேலுயர்த்தி அரசாளும் எந்நாடும் என்றும் விடியாதே எனச் சொல்லி விடிய வரும் காலை' என்பன போன்ற கருத் தோவியங்களைக் 'காலை'ப் பாடல்களில் கண்டு மகிழலாம்.

'இரவு' இன்பச் சுவையூட்டி நிற்கின்றது. 'ஊரிட்ட இருள் கிழிக்கும் விளக்கெல்லாம் அறிஞர் உரையொக்கும். என்பதில்தான் எத்துணைப் பொருட்செறிவு பாருங்கள்!

'இல்லடங்கா திருக்கின்ற இளங்காலை எருமை.
இரவினிலே ஒன்றிரண்டு கட்டுகயிறறுத்தே
கொல்லையிலே பயிர் மேயும் கொட்டகையைக் குறுகும்!
கொடுமைக்கும் அழிவுக்கும் நீ பொறுப்பா இரவே?'

எனவரும் அடிகளில் காணும் உள்ளுறையுவமம் கண்டு இன்புறத்தக்க தொன்றாகும்.

'அருவி' நீர்வீழ்ச்சியாக மாறுவதைச், 'சொல்லில் வல்லவர் பேருரை நயம்போல் தொடர்ந்து வீழ்ச்சியாய் மாறினாய்' எனக் குறிப்பிடுகின்றார்.

'வெள்ளை நீரினை வழங்கியும் குறையா வள்ளல் தன்மையைக்,
கொள்ளக் கொள்ளவும்
குறைவுறா தளிக்கும்
குன்றம் சூழ்மலை அருவியே!'

என வியக்கின்றார் கவிஞர்.

இங்கு எடுத்துக்காட்டப்பட்டவை ஒரு சிலவே. இவை போன்று கற்பார்க்கு இனிமை பயக்கும் கவின்பெறு பாடல்கள் அனைத்தையும் கற்றுத் தெளிதல் தமிழர்களின் தலையாய கடமையாகும்.

இந்நூல் புலவர்களுக்குப் புது விருந்தாகும்.

கவிதை பாடத் துடிக்கும் கவின்மிகு பாவலர் கட்குச் சிறந்த ஊன்று கோலாகும்.

இந்நூல் புலவர் வகுப்பிற்குப் பாடநூலாக வைக்கத்தக்கதாகும்.

புதுமைக் கவிஞர் வாணிதாசனாரின் புதுமைப் படைப்பாக வெளிவரும் இந்நூலினைத் தமிழ் கூறும் நல்லுலகத்து மக்கள் அனைவர்க்கும் படைக்கும் வாய்ப்பைப் பெற்றமைக்கு மகிழ்கிறோம். புதுமைக் கவிஞர்க்கும், அணிந்துரை நல்கிய சென்னைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆராய்ச்சி விரிவுரை யாளர், உயர்திரு. க.த. திருநாவுக்கரசு அவர்கட்கும் உங்கட்கும் வணக்கம்! நன்றி!

**பதிப்பகத்தார்**



## என்றும் வாழ்வார்
## எழில் விருத்தக் கவிஞர்!

உலக வாழ்வு உருண்டோடுகிறது. காலம் மாறிக் கொண்டே இருக்கிறது. புதுவரவுகள் பழமை மீது படிகின்றன. மறைவு நேர்கிறது.

1950 முதல் 1970 வரை வாணிதாசனார் மக்கள் நாவில் பயின்று, நெஞ்சங்களில் நிறைந்திருந்தார். புதிய இளைஞர்கள் பழையவர்களை நினைக்க நேரமின்றித் தங்கள் காலத்தவரையே காணலாயினர்.

பாவேந்தருக்கு அடுத்த நிலையில் புதுமைக் கவிஞர் எனப் பாராட்டப் பெற்ற கவிஞரேறு வாணிதாசனாரின் நூல்கள் புதுப் பிறப்பு காணாமையால் படிப்புலகம் மறக்க நேர்ந்தது. தொடர்ந்து நினைவூட்ட இக்காலத்தில் அரசியல் நிலையும் இலக்கிய ஆர்வமும் துணைபுரியவில்லை. எதற்கும் தூண்டுகோல் தேவையன்றோ? கவிஞரின் குடும்பத்தாருக்கும் பொறுப்புண்டல்லவா?

வாணிதாசனாரின் நூல்கள் வெளிவந்த காலத்தில் பழகி மகிழ்ந்த இன்ப உணர்வின் உந்துதலால் அவரது கவி நூல்களைப் பற்றிய திறனாய்வுகள், விளக்கக் கட்டுரைகள், வாழ்க்கைக் குறிப்புகள் எனும் வகையில் சில நூல்களை நான் வெளியிட்டேன். அத்தொடர்ச்சியில் இச்சிறு நூலையும் மறுபதிப்பாக வெளியிடுகிறேன். கடைசியில் 2 தலைப்புகள் இணைத்துள்ளேன். அவரே எழுதிய **நினைத்துப் பார்க்கின்...** எனும் வாழ்க்கைச் சுருக்கமும் இதில் சேர்க்கப்பட்டுள்ளது. உணர்வும் ஒத்துழைப்பும் முயற்சியும் உறுபயன் கூட்டுமாக!

இயற்கையின்பக் கவிஞர், கொள்கைப் பிடிப்பாளர், கவிஞரேறு வாணிதாசனார்க்கு ஆண்டுதோறும் விழா நடத்தி வருவதுடன் புதுவையில் அவருக்குச் சிலை எழுப்பும் நிலையறிந்து தமிழ்நெஞ்சங்கள் புதுவைஅரசுக்குப் புகழ்மாலை சூட்டி மகிழ்கின்றன.

வாழ்க வாணிதாசர் புகழ்!

என்றும் வாழ்வார் எழில் விருத்தக் கவிஞர்!

அன்பன்

22.7.2004

வெள்ளையாம்பட்டு சுந்தரம்

# 1. மணிக்கூண்டு



சீருடன் நிமிர்ந்த செங்கல்
 திருமணி மாடத்(து) உச்சித்
தாரணி தமிழர் நாட்டுத்
 தனிமதில் இடையில் மின்னி
ஊரினைக் காக்கும் வீரன்
 ஒப்பவே ஓசை காட்டும்
நேரிய செயலைக் கண்டேன்;
 நிமிர்மணிக் கூண்டே! வாழி! 1

காலையில் கிழக்கில் தோன்றிக்
 கடும்பகல் உச்சி மேவி
மாலையில் மேற்கில் சாய்ந்து
 வைகலை வெய்யோன் காட்டும்
மாலையின் அளவே யன்றி,
 மணிக்கூண்டே! உன்னைப் போலக்
காலத்தை ஒவ்வோர் நாளும்
 இராப்பகல் காட்டப் போமோ? 2

இருளினைப் போர்த்த வானில்
எழுமதி விண்மீன் கூட்டம்
அரும்பொழு(து) உணர்த்தும் என்றே
அறிவிப்பர்; முகில்கள் சூழ்ந்தால்
பெருமணிக் கூண்டே! காலப்
பிச்சையை நாட்டுக் கென்றும்
தருபவர் உன்னை யன்றி
யாரெனச் சாற்றக் கேளே! 3

காற்றினில் மழையில் வானக்
காரிடி வீச்சில் கோடை
ஆற்றொணா வெயிலில் நின்றே
அவரிவர் எனப்பா ராது
மாற்றார்க்கும் காலங் காட்டும்
மணிக்கூண்டே ! உன்னைப் போல
நூற்றிலே ஒருவ ரேனும்
மக்களில் நுவலப் போமோ? 4

இருண்டவர்க்(கு) அறிவை ஊட்ட
எவருளார்? ஆன்ற கல்வித்
தெருண்டவர் போல நாளும்
திசையில்வாழ் மக்கட் கெல்லாம்,
பெருமணிக் கூண்டே ! ஓசைப்
பேச்சினால் கடந்த காலம்
வருவதே யில்லை என்ற
வாக்கினை உணர்த்து கின்றாய்! 5

ஈன்றவள் பிள்ளை காத்தே
இருப்பினும் சிறிது போழ்து
தோன்றுவாள்; இமையை மூடித்
துயின்றுபின் எழுவாள்; நீயோ
ஈன்றவள் தனக்கும் தாயாய்
இமைநொடி மூடல் இன்றி
ஆன்றதை விளக்கி ஊக்கும்
அணிநகர்க்(கு) அன்னை ஆனாய்! 6

வீட்டினில் அறிவு மிக்க
மேலவள் மாமி வாழ்ந்தால்
வீட்டினில் ஒழுங்கு நேர்மை
மிகுந்திடும் என்பர் மேலோர்;
கூட்டினில் இருந்து கொண்டே
குடியினை ஊக்கி நாளும்
ஆட்டிடும் பெரிய மாமி
மணிக்கூண்டே ஆனாய்! வாழி! 7

தன்னலம் சிறிதும் எண்ணாத்
தகைமையால் உழைக்கும் சான்றோர்
மன்னிய புகழைப் போல,
மணிக்கூண்டே! உன்றன் ஓசை
எந்நாளும் நீண்ட தூரம்
இருப்பவர் அறிவர்; ஆனால்
உன்னைப்போல் மேலோர் எல்லாம்
நீண்டநாள் உயிர்த்த துண்டோ? 8

உழைப்பினைப் பொதுமை ஆக்கி
உருப்பெறும் விளைவை எல்லாம்
பிழைப்பவர் பகிர்ந்து துய்க்கப்
பேணுதல் பொதுமை ! ஆனால்
உழைப்பினை விளைவை எல்லாம்,
மணிக்கூண்டே ! உனக்கெண் ணாமல்
அழைத்துவாழ் மக்கட் கீயும்
அருஞ்செயற் கீடும் உண்டோ? 9

அறிவினால் பிறந்தாய்; வாழும்
அழகூரின் நடுவில் நின்றாய்;
நெறியொடு காலங் காட்டும்
நீர்மையை நினைக்குந் தோறும்
அறிவுக்கே உலகம் அண்டம்
அணுவுமே அடிமை யாகும்!
அறிவுக்கு வணக்கம் செய்வோம்!
அறிவினைப் பெருக்கு வோமே! 10



*''சீர்விள மாச்சீர் தேமாச்*
*சீரிணைந் திரட்டு மீங்கே''*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

விளம் என்ற இடத்துக் கூவிளம், கருவிளம் இரண்டும், மா என்ற விடத்துத் தேமா, புளிமா இரண்டும் கொள்க.

விளச்சீர் வரும் என்று விதித்த இடத்தில் தேமாங்காய், புளிமாங்காய்ச் சீர்களும் வரும் என்று அறிக.

இறுதிச்சீர் தேமாவாகவே வருதல் வேண்டும் எனக் கொள்க.

# 2. சுழல் விளக்கு



கண்ணுக் கெட்டா நெடுந்தூரக்
கடலைத் தாண்டிக் காலமெலாம்
மண்ணில் விளையும் பொருளோடும்
வாழ்க்கைக் குதவும் பொருளோடும்
விண்ணைத் தாவும் மணிமாடம்
மேவும் பேரூர்த் துறையோரம்
கண்ணைப் பறிக்கும் ஒளிவெள்ளக்
கதிரைப் பரப்பும் சுழல்விளக்கே ! 1

குன்றின் உச்சி மீதேறிக்
குளிர்ந்த கடலை நிலப்பரப்பை
நின்று சுழன்று திசைபார்க்கும்
நெட்டை மனிதன் போல் இரவில்
என்றும் கடலின் ஓரத்தே
இருந்து வாழும் சுழல் விளக்கே !
ஒன்று கேட்பேன்: கோட்டான்போல்
உனக்கும் பகலில் கண்குருடோ? 2

கடலில் நீந்திச் செல்கின்ற
கண்ணைக் கவரும் சிற்றூர்போல்
கடலைத்தாண்டும் நாவாயைக்
கண்டேன் ஒருநாள் சுழல்விளக்கே !
கடலைத் தாண்டும் நாவாயைக்
கட்டி அணைத்துன் ஒளிமுத்தம்
இடுதல் இன்றேல் கொடுங்கடலில்
எதிர்ப்பை யார்தான் முறியடிப்பார்? 3

நிறைந்த படையைத் தன்னகத்தே
நிறைத்துக் கொண்டே போர்க்காலம்
மறைந்து மறைந்து கடல்வாழும்
மாற்றார் கப்பல் நீர்மூழ்கி
உறையு மிடத்தைச் சுழல்விளக்கே!
உன்கண் கண்டும் ஊரறிய
அறையா திருந்தால் உன்னாட்டார்
ஊமை என்றே அறையாரோ? 4

பொங்கிச் சீறி அலையெழுப்பிப்
போரைச் செய்யும் கடலிடையில்
தங்கித் தவித்து விழிபிதுங்கித்
தடந்தோள் அறிவு துணையாகக்
கங்குல் பகலில் கடல்எதிர்த்த
கப்ப லோட்டி செய்தியெலாம்
எங்கட் கேனோ சுழல்விளக்கே !
இன்னும் சொல்லா திருக்கின்றாய்? 5

கத்தும் கடலின் ஓரத்துக்
கரையில் வாழும் சுழல்விளக்கே !
முத்துக் குவியல் கண்டிருப்பாய்;
முதிர்ந்த பவளக் காட்டிடையில்
செத்த மனிதர் கண்டிருப்பாய்;
சிதைந்த கலங்கள் கண்டிருப்பாய் !
பொத்தி வாயைத் திறவாமல்
பொறுத்தால் நெய்தல் பொறுத்திடுமோ? 6

நெய்தற் பேரூர்க் கரையோரம்
நிமிர்ந்து நிற்கும் சுழல்விளக்கே !
வையம் எங்கும் உன்னினத்தார்
கடலின் மருங்கே வாழ்ந்தாலும்
கையாம் ஒளியின் கதிர்வீசிக்
கரையின் ஊரை அறிவிக்கும்
பொய்யில் மொழியை நாவாய்க்குப்
புரியச் செய்தல் புதுமையதே ! 7

காலம் எல்லாம் கரையிருந்தே
கலத்தைக் காக்கும் சுழல்விளக்கே !
ஏலம் மிளகை மலைத்தேக்கை
இருண்ட கடலின் ஒளிமுத்தைக்
கூலப் பொருளை மாமயிலைக்
கொம்பைக் கொடுத்தே குதிரைகளை
ஏலக் கொண்ட தமிழ்நாட்டின்
துறைகள் இருண்ட வகைஎன்னே? 8

வெள்ள மாக மக்களெலாம்
விரும்பி விரும்பி உனைச்சுற்றி
உள்ளே சுழலும் படியூடே
உன்மேல் ஏறிச் சுழல்விளக்கே !
கொள்ளும் இன்பம் என்னாங்கொல்?
குன்றை ஊரை நீள்கடலை
அள்ளும் காற்று வெளியிருந்தே
அழகு படுத்திக் காட்டுவதோ? 9

சுங்கம் வாங்கும் கடலோரத்
துறையில் சுழலும் சுழல்விளக்கே !
எங்கெங் கிருந்தோ வந்தாலும்
எந்தக் கப்பல் ஆனாலும்
கங்குல் கிழித்து வழிகாட்டிக்
கரையை உணர்த்தும் மேலான
தங்கக் குணத்துக் கீடிந்தத்
தரையில் எதைநான் சொல்வேனே ! 10



*"இருமா காய்ச்சீர் அரையடிக்காய்
இவையே மற்றை அரையடிக்கும்
வருமா றுணர்க"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

# 3. கோட்டை



சீர்நிலவும் திருமுகத்தான்
திருநிலவும் மணிமார்பன்
திண்டோள் முல்லைத்
தார்நிலவும் தமிழ்மன்னன்
தன்னாட்டை அரசாண்ட
தகைமை செப்பிக்
கார்நிலயும் மலையுச்சி
கண்கவரும் பாழடைந்த
கருங்கற் கோட்டை
கூர்நிலவும் வேல்நுனியை
மறத்தோளைக் குறுநிலத்தைக்
கூறா நிற்கும் ! 1

படைநுழையா மலையரண்கள்
பகைதடுக்கும் பெருங்காடு
படுநீர்க் கோட்டை
இடைநுழையாப் பெருஞ்சுவர்கள்
சுவரின் மேல் இருந்தெதிர்க்கும்
இருப்பி டங்கள்
அடைநுழையாத் தேனீப்போல்
அணிவகுத்த வாள்மறவர்
ஆற்றல் யானை,
குடைநுழையாப் பெருவாயில்
நிலையெல்லாம் வருவோர்க்குக்
கோட்டை சொல்லும் ! 2

தலையேறி முடிமிதிக்கும்
மதயானை புரவியொடு
தறுகண் வீரர்
கலையேறிப் பாய்கின்ற
மலையேறிப் பகைவீழ்த்திக்
கைவேல் போக்கி
நிலையேறிப் பறக்கின்ற
கொடியாடும் நெடுஞ்சுவரில்
நின்றெ திர்த்துச்
சிலையேறி வீழ்ந்திறந்த
செய்தியெலாம் பழங்கோட்டை
செப்பும் அந்தோ ! 3

வீரமென்ற வெறியேற்றி
விரியுலக மக்களிலே
வெகுபேர் தம்மை
ஈரமென்ற சொல்லுக்கே
இடமின்றி எதிர்ப்போரை
என்றும் வீழ்த்தும்
காரமென்ற சொல்லுக்கே
வெற்றியென்று கதையளந்து
கட்டி வாழ்ந்த
தூரமுள்ள மலைக்கோட்டை
இன்றோபாழ்! தாயகத்தின்
துக்கச் செய்தி ! 4

உழைப்பளித்த விளைவினிலே
ஆறிலொன்றை உறுபொருளாய்
உற்றான் மன்னன்
பிழைப்பளித்துப் படைதேக்கி
நாடேய்த்த பெருமன்னர்
பெருங்கற் கோட்டை
தழைப்பளித்து வாழ்ந்ததில்லை;
தனிமனிதன் நல்வாழ்வு
சரியும் என்றே
அழைப்பளித்தே பாழடைந்த
கோட்டைமதில் அறிவுறுத்தும்
அணுகு வோர்க்கே !

கோட்டையென்ற மறைவுக்குள்
பெருமன்னர் ஒருகுடும்பம்
குலவி வாழ
நாட்டகத்துப் பேரூர்போல
மணிமாடம் நல்லரங்கு
நடனச் சாலை
காட்டகத்து மலைமேலே !
இந்நாளோ பாழடைந்த
கருங்கற் கும்பல் !
மேட்டகத்தே குரல்கொடுக்கும்
சிறுநரிகள், கூகையினம்
மேவும்; பாழாம் ! 6

எத்தனையோ முடிமன்னர்
இணையில்லாப் பெருவீரர்
இருகை கட்டி
முத்தணியும் பொற்கலனும்
முறைமுறையே இறைசெலுத்தி
முன்றில் நின்ற
புத்தெழில்சேர் மணிவாயில்
அணிமுரசம் போர்யானை
புகுந்த கோட்டை
இத்தரையில் அந்தோபாழ் !
முடியாட்சிக் குறிப்புணர்த்தல்
இதுதான் போலும் ! 7

கற்றுணர்ந்த நல்லமைச்சைக்
கவிபாடும் மேலோரைக்
கணித நூலைப்
பெற்றிருந்த முடிமன்னர்
பெருவாழ்வை அரசியலைப்
பேணிக் காத்த
சுற்றுமதிற் பெருங்கோட்டை
நிலையெல்லாம் தொகைநூல்கள்
சொல்லும்; மக்கள்
கொற்றமிலாக் குறையாலோ
நாட்டகத்துக் கோட்டைச்சீர்
குறைந்த தந்தோ! 8

சிலைசுற்றித் தமிழ்காத்துத்
திசையெட்டும் புகழ்நாட்டத்
திண்டோள் வீரர்
அலைசுற்றும் கடலாண்ட
பழம்பெருமை நூலகத்தே
அறிந்து கொண்டு
மலைசுற்றும் படியேறித்
தலைசுற்றி மலையுச்சி
மன்னர் கோட்டை
நிலைசுற்றிப் பார்க்கையிலே
தாயகத்தின் நினைப்பினிலே
நெஞ்சம் வேகும் !

நினைவென்றே உனையொதுக்கி
உன்னாட்டை ஆள்கின்றார்
நினைவில் மக்கள்;
நினைவிற்கே வரலாற்றுப்
பெரும்புலவர் நீள்குறிப்பை
நிலைக்கச் செய்தார்;
நினைவில்லாத் தாயகத்தின்
நிலையெண்ணா மக்கட்கே
நித்தம் நித்தம்
கனவாகிப் போனாயோ
மலைக்கோட்டைக் கற்சுவரே!
கருத்தை ஊட்டே! 10



*"முதனான்கும் காயாகிப் பின்னவைமா*
*தேமாவாய் முடியு மன்றே"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

# 4. மாலை



அங்கும் இங்குமாய்ச் சிதறிய வெண்முகில்
அடிக்கடி ஒளிமாறப்
பொங்கு செங்கடல் நீள்மலை ஒப்பவே
புத்தெழில் அமுதூட்டித்
திங்கள் நாணியே சிரித்தெழ ஊர்ப்பொதுத்
தெருவெலாம் விளக்கேற்ற
மங்கு செங்கதிர் தாமிரத் தட்டென
மயக்கிடு மருண்மாலை! 1

பூத்த தாமரை வானிடைப் போய்விழு
பொற்கதிர்ப் பொலிவோடு
மூத்த தாமுயிர் முன்நகு அல்லியின்
முகத்தினில் விழிக்காமல்
போர்த்து வோம்முகம் எனஇதழ்ப் போர்வையால்
பொலிமுக விழிபொத்தப்
பார்த்த பேடைகள் ஆணினை விளித்திடும்
படுகதிர் சாய்மாலை ! 2

வட்டத் தாமரை இலையினில் கண்வளர்
வாளைகள் நீர்மோதத்
தட்டி ஓட்டிடும் ஆயனின் கழியெனத்
தம்மனைக் கன்றுள்ளிக்
குட்டை மேவிய நாகுகள் வாலினைத்
தூக்கியே குதித்தோட
எட்டி மேற்றிசை மலையிடைப் பரிதிசாய்
எழில்மிகு சுடர்மாலை ! 3

மேலை வானிடை விரவிய செந்நிற
மிகுந்திடு ஒளிவெள்ளம்
சாலை மாவிளந் தளிர்நிறம் பூநிறம்
சார்ந்ததாய்த் தலைதாழ்த்திச்
சோலை புக்கிடும் இணையிணைக் குருவிகள்
தோப்பினைக் குறுகாமுன்
மாலை மங்கிடச் செவ்வொளி மங்கிடும்
மலர்மண இருள்மாலை ! 4

கன்று கூப்பிடக் கறவைகள் ஊர்புகக்
காரிருள் கீழ்நோக்க
முன்றில் நீள்சடை முதுகினை ஊன்றியே
முன்னுள வெளிநோக்கிச்
சென்ற ஆளனின் தோளினை உன்னிடு
தேமொழி மடமாதர்
என்று மீளுவர் சென்றவர் எனநினைத்
தேங்கிடு துயர்மாலை ! 5

மாடு கன்றொடு வயல்வெளி பூம்புனல்
 மலர்மிகு நீள்குன்றம்
ஊடு செஞ்சுடர் பொன்னிற மழைபொழி
 ஒளிகுறை கீழ்வானக்
காடு மேவிடும் கதிரவன் கண்டனம் !
 கவின்மிகு கதிர்அந்தி
ஓடு போழ்தினில் கீழ்த்திசை விளக்குகள்
 ஒத்தன விண்மீன்கள் ! 6

பந்தி பந்தியாய் நாரைகள் இணையுடன்
 படுகையைப் போய்ச்சேர
அந்தி பூத்திடப் பூத்திடும் வேலியில்
 அழகொளி பொன்பீர்க்கு!
சிந்து பூத்திடச் செவ்வொளி பூத்திடச்
 சிரித்தது செவ்வானம் !
வெந்து பூத்திடும் வானிடை முல்லைபோல்
 விரிந்தன விண்மீன்கள் ! 7

காயும் போழ்திலும் கடந்திடு போழ்திலும்
 கதிரொளி நனிநல்கும்
பாயும் செவ்வொளி மறைந்திட மறைந்திடு
 பகலவன் வழிநோக்கித்
தேயும் திங்களும் வழியினைக் கூட்டியே
 திரும்புவோர் செயல்போலச்
சாயும் செங்கதிர் போய்விழ நன்றியாம்
 தண்ணொளி முகம்காட்டும்! 8

ஆலை மாடென மற்றவர் நலம்பெற
 அடிக்கடி நாடோறு
வேலை செய்திடு கூலிகள் ஏழையர்
 வியர்வையின் பரிசாக
மாலை தந்திடு சிறுபொருள் வாங்கிடு
 மனத்தினில் தெளிவில்லாக்
கூலி ஆட்களின் கொதிமனம் போலொளி
 குன்றிய குளிர்மாலை! 9

தெங்கு மாவினில் செவ்வொளி மங்கிடத்
 தெருவினில் நீர்தெளித்து
மங்கை மெல்லியர் வாழ்மனை கூட்டியே
 மாவினார் கோலமிட்டுச்
செங்கை ஏந்திய விளக்கினை நீள்கடைத்
 திண்ணையின் மேலேற்றிக்
கங்குல் நீக்கிடு திங்களை வாழ்த்திடு
 கவின்மிகு கார்மாலை! 10



*"குறிய ஈற்றுமாக் கூவிள முவவிளங்*
*காயொடுங் குறிகொள்ளே"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்குகேற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம். காயொடும் என்பது மாங்காய் என அறிக.

# 5. சேவல்



கொள்ளி நுனியெரி தீயோ,
  கொம்பிடைப் பூத்தசெம் பூவோ
வெள்ளை நிறத்தொடு புள்ளி
  மேவிய சேவலின் கொண்டை?
துள்ளி இறகினை தட்டித்
  தொடர்ந்திடு பெட்டையின் பக்கம்
பள்ளம் சீய்த்திடு சேவற்
  கூக்குரல் பைந்தமிழ்ப் பாட்டாம்! 1

புன்செய் வயல்வெளி நட்டுப்
  போற்றிவ ளர்த்திடு முற்றா
மஞ்சட் கிழங்கினை மானும்
  வாய்த்தவி ரல்களைக் கொண்டே
நன்செய் வளந்தரு குப்பை
  நன்மணி நாளெலாம் சீய்த்தே
கொஞ்சு மணிக்குரற் சேவல்
  குப்பைகு லைத்தர சாளும்! 2

மண்ணில் உழைத்ததால் நேர்ந்த
வலியினைப் போக்கவே உண்டு
கண்ணை இறுக்கியே தூங்கும்
காளையர் கன்னியர் வீட்டுத்
திண்ணை உறங்கிடு நாய்க்கும்
தெருவிடைத் தூங்கிடும் ஆட்கும்
விண்ணில் ஒளிவரு செய்தி
விளம்புமே வைகறைச் சேவல்! 3

பெட்டைக் குணவினைக் காட்டப்
பெருங்குரல் இன்றியே கூவும்;
பெட்டை உணவுணச் சேவல்
பின்புறம் நோக்கியே நிற்கும்;
கட்டைச் சுவரிடை ஏறிக்
காளையைப் போல் நடை காட்டும்;
முட்டை இடும்வரை சேவல்
முன்புறப் பின்புறக் காவல்! 4

நாணல் முளையினை வெட்டி
நறுக்கிய துண்டினைப் போலக்
காணும் விரலிடை முள்ளும்
சேவலின் கைப்படை வேலாம் !
தூணைத் தாக்கிடு தூண்போல்
தோற்றிடு மட்டுமே கொத்தும் !
ஆணை எதிர்த்திடு சேவல்
ஆண்மையே ஆண்மையென் போமே ! 5

ஒன்னார் படையினை வென்றே
ஒள்முர சார்த்திடல் ஒப்ப
முன்னர் எழும்பியே தாவி
முன்னுள சேவலின் உச்சி
தன்னைப் பலமுறை முள்ளால்
தாக்கிடும் ; வென்றுபின் கூவும்!
தன்முன் புறமுது கிட்ட
சேவலைத் தாக்குமோ சேவல்? 6

கொண்டை நிமிர்த்தொலி யார்க்கும்
கோழியின் சண்டையைக் கண்டோ
முண்டி எழுந்ததிர் வந்தே
மூண்டிடும் நீள்பகை சீறிப்
பண்டைத் தமிழ்நில மக்கள்
பகையடி பிற்பட மீண்டும்
சண்டை இடுபவர் மீதே
தம்படை ஏவுதல் இல்லை? 7

மாட்டுத் தொழுவரு குள்ள
மண்ணிடைக் குஞ்சுகள் மேயக்
கூட்டி ஒதுக்கிய குப்பைக்
குப்பலில் பெட்டையும் ஏங்கும்;
வீட்டு நெடுவளைக் கூரை
மேலிருந் தேநடை காட்டி
வாட்டம் விலக்கிடு காதல்
மணிக்குரல் காட்டுமே சேவல்! 8

வீட்டுத் தலைவனைப் போல
  வேலிநி ழல்மனை தோறும்
கூட்டி ஒதுக்கிய குப்பைக்
  கூலம ணிகளைக் கூவிக்
காட்டி மனைவியாம் பெட்டை
  காதலர் குஞ்சுகள் மக்கள்
ஊட்டிக் குடித்தனம் செய்யும்
  சேவலை ஒப்பவர் உண்டோ? 9

பெட்டை நடந்திடப் பிள்ளைக்
  கோழிகள் பின்புறம் ஓடும்;
பெட்டைக் குறுதுணை யாகப்
  பின்புறம் குஞ்சுகள் காத்தே
நெட்டை மறவனாம் சேவல்
  நின்றுநின் றேவழி பார்க்கும்;
பட்டப் பகலிலும் சேவல்
  பெட்டையின் பக்கமே காவல்! 10



*"ஒன்று மூன்றுடன் ஆறு*
*மா; விளம் பிறவிடம் உறுமே"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

# 6. சோலை



சோலைப் புதுப்பெண்ணைக் காணத்
தூரத்து மாமலை விட்டே
மாலைக் கதிரொளி மங்க
வந்தது மாமணத் தென்றல் !
காலை உயர்த்தியே வானக்
கார்முகில் கண்டாடும் தோகைக்
கோலத்தை எள்ளி நகைத்தே
குழலிசை மீட்டின தும்பி ! 1

மாவிலை ஒத்ததோர் கிள்ளை
வான வெளியினில் கத்தத்
தாவிப் பறந்தோடித் தத்தை
சாரல் மலைசுற்றி மீளும் !
காவிற் கழுகுசெய் பெண்கள்
கண்ணகை காட்டிடு பூக்கள் !
ஆவி பறித்திடக் கண்டேன்;
அடடா ! அழகேபூஞ் சோலை ! 2

வண்ண மலர்கள்நீள் பாத்தி!
மாமணப் புற்கள்நீள் பாத்தி!
கண்ணைக் கவரும் செடிகள்!
காற்றில் அலையும் கொடிகள்!
விண்ணை இடிக்கும் கிளைகள்!
விரிவான் மறைக்கும் மரங்கள்!
உண்ணத் தெவிட்டா இயற்கை
ஓவியப் பேரெழில் சோலை! 3

அந்தி விளக்கினைப் போல
அலர்ந்தது சோலைச்செவ் வந்தி!
புந்தி மயக்கின ஆம்பல்!
புதரில்கை நீட்டின முல்லை!
செந்தீ உலையினைப் போலச்
செழுமலர் பூத்த(து) இலவு!
நொந்த உளத்தினை மாற்றும்
நுழைபுலத் தோர்ஒக்கும் சோலை! 4

மஞ்சள் நிறத்துச்சா மந்தி
மணமகள் போல்வர வேற்கும்!
கொஞ்சிடும் சிட்டிணை கொம்பில்!
குளிரிசை மீட்டும் குயிலும்!
வஞ்சியர் நூலிடை போல
மரத்திடை மேவிய கோவை
செஞ்சொல் வழங்கும் இதழாம்
செம்பழம் நீட்டிச் சிரிக்கும்!

வாயில் வருபவர் முன்னே
வணங்கி வரவேற்கும் கைபோல்
சாயல் குறையாக் குளத்துள்
தாமரை கூம்பி அழைக்கும்!
பாயினை எங்கும் பரப்பி
வைத்த மணவறை போலக்
காய்கனி பூத்த மலர்கள்
கலைவிருந் தூட்டும் சோலை! 6

சோலையாம் கோட்டையின் உள்ளே
தூண்களாம் மாபலா தென்னை!
கோல வளைவுகள் கோட்டை
கொட்டு முரசார்க்கும் வாயில்!
மாலையில் வந்தவர் குந்த
வரிசையாய் இட்ட இருக்கை
மேலவர் கூடிடத் தென்றல்
வேந்தன் அறம்பயில் சாலை! 7

வெட்டி நறுக்கிய வேலி
விரிவில் விளங்கிடு பூக்கள்
நட்ட மரகதக் கோட்டை
நடுமதில் ஆடும் கொடிகள்!
தொட்டில் விழித்த குழவி
தொங்கிச் சிரிப்பதைப் போலச்
சட்டி படர்ந்த கொடிப்பூ
தலைமேல் அசைந்திடும் சோலை! 8

புல்லும் புதரும் மணக்கும்;
　　பூண்டும் கொடியும் மணக்கும்;
கல்லும் மணக்கும்; சருகு
　　கண்ட இடமும் மணக்கும்;
செல்லும் வழியும் மணக்கும்;
　　சிறுசெடிப் பூவும் மணக்கும்;
அல்லும் பகலும் மணத்தை
　　அள்ளி வழங்குமே சோலை! 9

குளக்கரை பூத்தமா வேம்பு
　　குடிசெய் குயிலிசை மீட்ட
அளப்பரும் தோகைநின் றாட
　　அழைப்பன போற்கிளை சாய
விளக்கினை ஏந்தியே மன்றில்
　　விழவயர் கன்னியர் போலக்
குளத்துச்செவ் வல்லியும் பூக்கக்
　　குளிர் அர(சு) ஓச்சிடும் சோலை! 10



*"கடையது மாவிள மாச்சீர்*
*　　கலந்தது வெண்டளை என்ப(து)*
*உடையது பாதியி ரண்டும்"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம். விளத்திற்குப் பதிலாக மாங்காய்ச்சீரும் வரலாம். எனவே, இருவகை வெண்டளைகளும் விரவியிருக்கப் பெறும் என அறிக.

# 7. கடலோரம்



மக்கள் வாழும் பரப்பாம் உலகில்
வாழ்நீர் முக்காலே
ஒக்கும் என்ற மேலோர் வாக்கை
ஒக்கும் நீள்கடலின்
பக்கக் கரையாம் மணலின் பரப்பாம்
பாயும் அலைவெருட்டி
மிக்க புகழ்சேர் நாட்டைக் காக்கும்
வீரன் கடலோரம் ! 1

பெய்தல் விளைக்கும் வான முகில்கள்
பிறந்த நீள்கடலின்
கையாம் அலைகள் கொடுமை கண்டே
காலப் பேரரசன்
உய்ய நெடுக நிறுத்தும் படையோ
ஒளிமண் பெருமேடு?
நெய்தல் நாட்டின் அரணோ சுவரோ
நீண்ட கடலோரம் ? 2

தென்னை இசைக்கப் பனைமா ஆர்க்கத்
தேங்கும் கழியோரம்
புன்னை சிரிக்கத் தாழை மணக்கப்
புதரில் அடைகாக்கும்
அன்னைக் குருகின் முன்னர்க் கொஞ்சும்
ஆணாம் பெருநாரை !
சின்ன நண்டுக் குஞ்சு பதுங்கச்
சிரிக்கும் கடலோரம் ! 3

குந்தி அன்னை குளிர்கால் சுவைக்கக்
குழந்தை மணல்தோண்டச்
சிந்தும் கிளிஞ்சல் சிறுவர் பொறுக்கத்
திரைகால் உடல் நனைக்க
முந்தும் அலைகள் கரையைத் தாவி
மோதி முரசார்க்கச்
சிந்தைக் கின்பம் வாரி வழங்கும்
திரைபாய் கடலோரம் ! 4

தளிர்த்த புல்லும் செடியும் கொடியும்
சமைத்த சிலையோடும்
குளிர்ந்த நிழலும் மணஞ்சேர் மலர்கள்
குலுங்கும் பூங்காவும்
நெளிந்த நீல அலைகள் நல்கும்
நெடுநீர் இளங்காற்றும்
அளிக்கும் இன்பம் ! ஒலிவான் பாடல்
அளிக்கும் கடலோரம் ! 5

கூறு கூறாய்த் தோணி மரமும்
குடிசெய் பெருவலையும்
மாறு பட்ட நெய்தல் நிலத்து
மக்கட் சிறுகுடியும்
சீறும் அலையை வென்றிங் காண்ட
தெற்கின் புகழ்பாடித்
தாறு மாறாய்க் கிடக்கக் கிடக்கும்
தமிழ்சேர் கடலோரம் ! 6

உப்பிட் டுலரும் வாடு நாற
உலர்த்தும் வலைநாறக்
குப்பைப் புன்னை வெண்பூ நாறக்
குளிரும் கழிநாற
ஒப்பில் நெய்தற் கன்னிப் பெண்கள்
ஒளிசேர் விழிநாறச்
சிப்பி நாறச் செழுமண் நாறும்
சிற்றூர்க் கடலோரம் ! 7

திரைமேல் சென்றோன் மனைவி மைக்கண்
திசையில் போராட
மரத்தில் ஏறி நெய்தற் சிறுவர்
மறிநீர் போராட
உரத்த குரலில் நுளையர் வலைமீன்
உந்திப் போராடக்
குரைக்கும் அலைகள் கரையில் மோதும்
குளிர்ந்த கடலோரம் ! 8

மட்டார் குழலித் தமிழப் பெண்கள்
வாட்கண் முகமொக்கும்
வட்ட நிலவு கோடி எழுந்து
வான வெளிவிட்டே
எட்டி யெட்டிக் கடலைப் பார்க்க
இறங்கி வந்ததென
நட்ட விளக்குச் சுடரைப் பரப்பும்
நகரக் கடலோரம் ! 9

தணலைப் போக்கச் சீறிப் பாய்ந்தே
தாவும் அலையோரம்
அணிசேர் பெண்டிர் ஆண்கள் சிறுவர்
அங்கும் இங்குமென
மணலிற் பொங்கும் ஆடல் பாடல்
மக்கட் பெருங்காடு
தணிய மாலைத் தணியா மாலைத்
தருமே கடலோரம் ! 10



---

*"மாச்சீர் ஐந்து காய தொன்று"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

# 8. ஆறு



விண்ணிடை எழுந்த முகில்களின் பேய்ச்சல்
விளைவினால் குறிஞ்சியில் பிறந்து
கண்ணிடை யருவி மலையிடை மருவிக்
கடந்தனை ; முல்லையில் ஓடிப்
பண்ணிடை கூட்டி மருதமாம் நாட்டில்
பலகிளை ஓடைகள் சேர
விண்ணிடை நீலம் மேவிய கடலுள்
மேவினை வழியறிந்(து) ஆறே ! 1

வயலிடைப் புகுந்தாய்; மணிக்கதிர் விளைத்தாய்;
வளைந்துசெல் கால்களால் ஆறே !
அயலுள ஓடை தாமரை கொட்டி
ஆம்பலின் இதழ்களை விரித்தாய்;
கயலிடைச் செங்கண் கருவரால் வாளை
கரைவளர் தென்னையில் பாயப்
பெயலிடைப் பட்ட வானெனத் தோன்றும்
பெருங்குளம் நிறைத்துவிட் டாயே ! 2

வழியினில் கண்ட மண்வளம் யாவும்
வணிகனைப் போலுடன் ஈட்டிக்
கொழித்தனை மருதம்; விளைத்தனை; மீண்டும்
கொள்முதல் செய்தவை யாதாம்?
கழியினில் தேங்கி உப்புடன் கலந்தாய்;
கடலிடை விரைந்துமே ஓடி
அழிந்தனை ஆறே ! அலைகட லுலகில்
அழிவது பிறப்பதின் வித்தாம் ! 3

மலைமகள் மார்பு மாலைபோல் பிறந்தாய் ;
வளர்ந்தனை சாரலில் பெருகி ;
இலையடர் பாறை மயிலினம் ஆட
இருங்குயில் தமிழிசை பாடத்
தலைத்தலை யாக முல்லையிற் பூத்த
தளிர்மலர் வண்டுயாழ் மீட்டக்
கலைபயில் மன்ற முழவென, ஆறே !
களிப்பினை ஊட்டுகின் றாயே ! 4

உன்வழி மறிப்போர் கொடிற்றினை உடைக்கும்
உயர்வலி உன்னிடம் வாய்த்தும்
உன்வழி மறித்தே உன்வலி அடக்கி
உயரணை கட்டிய போழ்தும்
மின்னிடி தேக்கும் முகிலினம் நாண
மிகுபொருள் வள்ளலைப் போலப்
பொன்கொழி ஆறே ! மருதமும் பாலைப்
பொட்டலும் சோலைசெய் தாயே ! 5

தாமரை முகமோ தடங்கயல் விழியோ
தாவுசெங் கண்வரால் கையோ
மாமரு அல்லி செவ்விதழ் கொஞ்ச
வாய்த்தநற் செவ்விதழ் தாமோ
காமரு வாழை கால்களோ பூண்ட
கைவளை சங்கினம் ஆமோ
பூமரு வண்டு விழிநகை மங்கை
போன்றனை ! வாழிநீ ஆறே ! 6

அறிவிலா மக்கள் அணுகிய போதும்
அவரவர் கீழ்மையை மாற்றும்
அறிவுடை யான்ற மேலவர் போல
அணுகிய கழிவுநீர் யாவும்
நெறியொடு மாற்றி நீர்மையைத் தேக்கி
நின்கரை புதுமையால் விளைந்த
பொறியினை இயக்கி மின்விசை நல்கிப்
புரந்தனை உலகினை ஆறே ! 7

ஊட்டியே வளர்க்கும் வயல்மிகு சிற்றூர்
உயர்மணி நெடுங்கடைப் பேரூர்
காட்டினில் ஆடும் பிடியினம் நாணக்
கலையிருள் வைகறை தோறும்
கூட்டமாய்ப் பெண்கள் குடத்தினை ஏந்திக்
குளிர்புனல் ஆடிட வருவர்;
நாட்டினில், ஆறே ! நீயிலா ஊர்க்கே
நல்லழ கில்லையென் றாரே ! 8

சுற்றிய முந்நீர் உலகினில் ஆறே
தோன்றிய நாளெதோ அறியேன்!
பெற்றவள் போலப் பேருல கெங்கும்
பிறந்தநல் லுயிர்களுக் குணவாம்
உற்றநன் னீரை ஊட்டினை; வாழி!
உன்கரை தங்கினர் மக்கள்;
கற்றனர் வாழ; இயலிசை கூத்தைக்
கண்டனர்; அரசுகண் டாரே; 9

கொண்டலில் பிறந்து கொண்டலுக் குதவிக்
குடிமுறை காத்தனை ஆறே!
பண்டைய புலவர் பண்பெலாம் பெற்றாய்!
பாரினைத் திருத்தினை; வாழி!
அண்டைய வாழ்வை அழித்தனை; ஆக்கி
அரசுபோல் உலகினைக் காத்தாய்!
எண்டிசை யுலகில் யாதுமே உன்போல்
இளமையோ டிருப்பது முண்டோ? 10



---

*"நால்விள மும்மா நடைபெறும்"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம். 2,4,7 ஆகிய இடங்களில் மாச்சீரும் பிறவற்றில் விளச்சீரும் வரும் என அறிக.

# 9. விண்மீன்



செங்கதிரோன் மலையிடையில் செம்மை தேக்கும் ;
செடிகொடிகள் பொன்பூக்கும்; திரும்பும் புட்கள் ;
மங்கிவரும் ஒளிக்கெதிரே மேற்கு வானில்
மையிருட்டுக் கைந்நீட்டும்; வானம் பூத்துத்
தொங்குகின்ற பீர்க்கம்பூப் போலக் கண்முன்
தொடுவானில் கீழ்த்திசையில் ஒளியில் மங்கி
அங்கொன்றும் இங்கொன்றும் முன்னர்த் தோன்றி
அடுத்தநொடி வான்நிறையும் விண்மீன் கூட்டம்!1

தைத்திங்கள் குளம்பூத்த பூவோ விண்மீன் ?
தமிழ்வேந்தர் வெளியிட்ட சின்னக் காசோ,
மைத்தடங்கண் மடமாதர் உதிர்த்துப் பின்னர்
மாலைக்குத் தேர்ந்தெடுக்கும் முல்லைப் பூவோ,
தைத்திட்ட பட்டாடை முத்தோ, தீட்டித்
தரப்பட்ட ஒளிக்கல்லோ, சரிகைச் சேலை
உய்த்திட்ட பொடிப்பூவோ, தொலைவில் தோன்றும்
ஊரிட்ட மின்விளக்கோ விண்மீன் கூட்டம்?2

நிலமுதிர்ந்த இலுப்பைமரத் தந்தப் பூவோ,
நீர்குளித்த கடல்முத்தோ, பவளக் காடோ,
நிலைகுலைந்த பொற்சிலையின் சிதறல் தானோ,
நெல்முத்தோ, மகிழமரம் உதிர்த்த பூவோ,
நிலவரசிப் பெரும்படையோ, நீல வான
நெடுவயலில் தெளித்திட்ட தூள்பிண் ணாக்கோ
கலையாத ஓவியமாம் கண்முன் தோன்றிக்
களிப்பூட்டும விண்மீன்கள்? விந்தை! விந்தை! 3

பெண்ணரசி நிலாப்பெண்ணாள் வெளியில் வந்தால்
பேரரசர் பின்செல்லும் கூட்டம் போல
விண்ணுலகில் ஒளிமங்கிக் கிடக்கும் விண்மீன்
விடியளவும் ஒளிவீசிக் காலை மங்கும்!
மண்ணரசர் முன்தோற்ற படையைப் போல
வளர்பரிதி வரக்கண்டால் மறைந்து போகும்!
கண்ணுக்குப் பேரழகே வகைவ கையாய்க்
காட்சிதரும் விண்மீன்கள்! விந்தை! விந்தை! 4

திங்கட்கும் பரிதிக்கும் ஏங்கு கின்ற
திருமலர்கள், விண்மீன்கள்! உங்கட் குண்டோ?
எங்குள்ளீர் என்றும்மை மனிதர் கூட்டம்
எண்ணாம லிருந்தவொரு கால முண்டாம்!
இங்கிருந்தே உம்மையெல்லாம் அடக்கி யாள
ஏவுகணை கண்டுவிட்டார் அறிவின் மேலோர்!
மங்குகதிர் மீனினங்கள் பகலொ ளித்தே
வாழ்ந்தாலும் விடமாட்டார்! அறிவே வெல்லும்! 5

விண்மீனில் ஒன்றிரண்டு தெற்கில் நிற்கும்
விரிவானில் ஒன்றிரண்டு வடக்கே செல்லும்;
வெண்ணிலவைப் பின்தொடரும் ஒன்று; நல்ல
விளைவாக்கும் பெருமழையை உணர்த்தும் ஒன்று;
மண்ணுள்ளோர்க்(கு) அதிகாலை வரவைச் சொல்ல
வானடியில் முளைத்துவரும் ஒன்று; மற்றும்
எண்ணுக்கே அடங்காமல் காலம் காட்ட
இரவினிலே எழுகின்ற மீனும் உண்டே! 6

மக்களெல்லாம் குரங்கினத்தின் வகையே யென்று
வரலாற்றார் உரைக்கின்றார்; மெய்யோ; பொய்யோ?
மக்களிலே தீமைபல நாளும் செய்யும்
மடச்சிறுவர்க்(கு) இங்குள்ளோர் 'வால்!வால்!' என்றும்,
எக்களிப்பில் 'குரங்'கென்றும் சொல்லிச் சொல்லி
இடித்துரைத்தல் கேட்டதுண்டு! வானில் தோன்றும்
சொக்கவெள்ளி மீனினங்கள்! உங்கட் குள்ளும்
வால்முளைத்துத் தோன்றுமினம் உண்டு போலும்! 7

கல்லெழுந்து மண்தோன்றி மக்கள் தோன்றிக்
கடல்சூழ்ந்த உலகத்தில் வாழ்தல் கண்டோம்;
அல்லெழுந்து வான்தோன்றி ஆட்சி செய்யும்
அழகுமிகு விண்மீன்காள்! உங்கள் வாழ்வு
பல்லூழிக் காலமென உரைக்கின் றார்கள்!
பண்பட்ட பெரியோரும் இந்த நாட்டில்
புல்முளைக்கப் போனார்கள்! ஆனால், நீங்கள்
புதுப்பொலிவில் எப்படித்தான் வாழ்கின்றீரோ? 8

மண்ணுலகம், விண்மீன்காள்! நீங்கள் இன்றேல்
வாழாதாம் ஒரு நாளும்! உண்மை! உண்மை!
விண்ணுலகில் வாழ்கின்ற நீங்கள் என்று
விரிவானில் பிறந்தீரோ? கண்டார் இல்லை!
மண்ணுலகில் வாழ்வோர்க்கே வயது நூறாம்!
வாழையடி வாழையென வந்த பேச்சு!
கண்சிமிட்டும் மீனினங்காள்! உயிர்கள் சாகக்
காண்கின்றீர்! நும்கடைநாள் யாரே காண்பார்? 9

வளிக்குயிராம் ; வான்தோன்றி வெறிகொண் டோடும்
மழைக்குயிராம்; மழைவிளைக்கும் நன்செய் புன்செய்
வெளிக்குயிராம்; வெளியினிலே என்றோ தோன்றி
வீசுகின்ற புயற்காற்றுக் குயிராம்! வெய்யோன்
ஒளிக்குயிராம்; ஒளிமாற்றி உலகுக் கீயும்
உயர்வானுக் குயிராகும்; காண்போர்க் கென்றும்
துளித்துளியாய் வான்நிறைந்தே உலகைக் காக்கத்
தோன்றுகின்ற விண்மீன்காள்! வாழ்க! வாழ்க! 10



---

*"காயிரண்டு மாவொன்று தேமாவொன்று*
*கலந்தவடி இரட்டும்அதன் விகற்பங் காணே"*

என்னும் 'விருத்தப் பாவியல்' நூற்பாவுக்கு ஏற்ப அமைந்த அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம். காய்ச்சீர் இரண்டும் மாச்சீர் ஒன்றும் தேமாச்சீர் ஒன்றும் புணர்ந்திரட்டியதை காண்க.

# 10. காலை



வெண்ணிலவு மேற்றிசையில் ஒளிமங்கிச் சாயும்;
விடிவெள்ளி கீழ்த்திசையில் புன்முறுவல் பூக்கும்;
பண்ணெழுப்பும் வரிவண்டு; முல்லைமலர் நாறும்;
பசுங்குழவி விழிமலர்த்திக் காலுதைத்துக் கத்தும்;
கண்ணுறங்கா துறங்குகின்ற இளந்தாயின் கைகள்
கைக்குழந்தை உடல்வருடும்; பூமணத்தை வாரி
மண்ணெழுந்து குளிர்காற்று மெல்லவந்து சேரும்
மரக்கிளைகள் சலசலக்கும்; மலர்ந்துவரும் காலை! 1

பொன்பூத்த கருவானம் பொலிவற்றுப் போகும்;
புதரெல்லாம் சிட்டிசைக்கும்; வீட்டோரச் சாலை
முன்பூத்த மரமெல்லாம் தாதுதிர்க்கும்; வேலி
முள்முருங்கைக் கருமொட்டுச் செவ்விதழை நீட்டும்;
மின்பூத்த விடைநல்லார் இல்லத்துப் பெண்கள்
வெளிக்கதவின் தாழ்விலக்கச் சிலம்பொலிக்கும் முன்றில்;
பின்பூத்து வருங்கதிரோன் வரவுரைக்கக் கீழ்வான்
பேரழகை உலகளிக்கும் ; மலர்ந்துவரும் காலை! 2

வீட்டோரச் சுவரிருந்து செம்மூக்குக் கிள்ளை
விரிவானில் சிறகடித்து வெளிவானில் கத்தும்;
மேட்டோரப் பெருமரத்தில் காக்கைகளின் கூச்சல்
விலைபேசும் பெருஞ்சந்தை இரைச்சலெனக் கேட்கும்;
காட்டோரக் கூடெல்லாம் காதினிக்கும் பாட்டல்;
கருங்குயில்கள் கவிஞன்போல் இடையிடையே பாடும்;
கூட்டோரத் தேன்குடத்தில் கருவண்டு செந்தேன்
குறைநிறைக்கும்; கொடிபூக்கும்; குளிர்ந்துவரும் காலை ! 3

செம்பருத்திச் செடிபூக்கும்; தீக்கொண்டைச் சேவல்
சிறகடித்துக் குரலெழுப்பிப் பெருமுழக்கம் செய்யும்;
கம்பத்து விளக்கெல்லாம் ஒளிமங்கிப் போகும்;
கருவானம் உருமாறும்; கவிழ்ந்தவிருள் தேயும்;
கும்பத்து நீர்மொண்டு சாணமிடும் பெண்கள்
குரல்கேட்கும்; குளிர்காற்றுக் கதவிடையில் பாயும்;
தெம்பற்றுக் கிழப்பாட்டி பாக்கிடிக்கும் ஓசை
தெருக்கோடி எதிரொலிக்கும்; சிரித்துவரும் காலை !4

குளத்தினிலே தாமரைகள் தமிழ்மனன்ர் கூட்டம்;
குளிர்அல்லி முகஞ்சுருக்கும்; கொடித்தக்கை பூக்கும்;
பளபளக்கும் பச்சையிலை மரகதப்பூந் தட்டு;
பாய்ந்தேறும் சொரித்தவளை பாசியிடைக் கத்தும்;
இளவாளை கொலைவாளாம்; எழுந்தடித்துப் பாயும்;
இலைமறைவில் நீர்ப்பாம்பு தலைநீட்டிப் பார்க்கும்;
உளத்தினிலே மகிழ்வூட்டும் தொடுவானச் செம்மை
ஒளிக்கதிர்கள் பொன்வரிகள்; ஒளிர்ந்துவரும் காலை ! 5

வயலெல்லாம் பசுங்காடு; பசுங்காட்டின் உச்சி
மணிக்குலங்கள் பனித்துளிகள்; காலைதந்த செல்வம்!
அயலோடும் வாய்க்காலில் சேலினங்கள் ஏறும்;
அடர்நீலம் அரிவையரின் குளிர்விழியைக் காட்டும்;
பெயல்தேய்ந்த வானத்து மூடுபனி மூட்டம்
பின்பொருளைக் காட்டுகின்ற திரைச்சீலை யொக்கும்;
மயலூட்டும் அதிகாலை! மதகிடுக்குச் சந்தில்
வழிந்துவரும் தண்ணீரும் மனம்குளிரச் செய்யும்! 6

குளிர்நிறைந்த ஊரிடையில் சிறுவெப்பம் பாயும்;
கூரையின்கீழ் மண்சீய்த்துக் குக்கலினம் தூங்கும்;
தளிர்நிறைந்த மரக்காடு சருகுதிர்த்து நிற்கும்;
தரையெல்லாம் சிறுபுகைச்சல்; தழைகண்ணீர் சொட்டும்;
ஒளிநிறைந்து வான்பரந்து பொன்னருவி போல
ஊர்நுழையும் செங்கதிர்கள்; ஓவியப்பே ரின்பம்!
களிநிறைய உணர்வூட்டி உறங்குகின்ற மக்கள்
கண்மலர்த்தும்; கதிர்க்கையை நீட்டிவரும் காலை! 7

கொல்லையிலே இளநாகு கன்றுன்னிக் கத்தும்;
குடிசெய்ய நீர்மொள்ளும் குடத்தோசை கேட்கும்;
எல்லையிலே நிற்கின்ற பெருமலையின் உச்சி
எரியிட்ட சூளையைப்போல் பனிப்புகையைக் கக்கும்;
முல்லைநில ஆய்ச்சியர்கள் தயிர்கடையும் ஓசை
முறைகெட்ட மலையருவி இசைப்பாட்டை ஒக்கும்;
மெல்லமெல்ல ஒளிபெருகும்; ஊர்விழித்துக் கொள்ளும்;
விடிவெள்ளி அழத்தொடங்கும்; விரைந்துவரும் காலை! 8

வாலுயர்த்தி இளங்கன்று தாய்மடியை முட்டும்;
மடிகறக்கும் நல்லாயன் கலம்நிறையும் தீம்பால்;
காலுயர்த்திப் பாய்ந்தோடும் கட்டவிழ்த்த காளை;
கடைமுன்றில் மாக்கோலம் கைத்திறத்தைக் காட்டும் ;
கோலுயர்த்தி எருதோட்டி உழுபடையைத் தூக்கிக்
கொல்லைக்குச் செல்கின்ற நல்லுழவன் இன்றேல்
வேலுயர்த்தி அரசாளும் எந்நாடும் என்றும்
விடியாதே எனச்சொல்லி விடியவரும் காலை! 9

வல்லுயிரைப் புறங்கண்டு வாழுமுயிர் ஓம்பும்;
மண்ணுலகும் விண்ணுலகும் வாழ்வளித்துக் காக்கும்;
எல்லையிலா நெடுங்கால இயற்கைதந்த வான
எழிற்செல்வம் தீச்செல்வம் ஒளிச்செல்வம் யாதாம்?
மெல்லிசையில் குயில்பாட விரிந்தமலர் நாற
விரைந்தோடும் நீள்குன்ற அருவிமுழ வார்க்க
கொல்லன்தீ உலைபழுக்கும் நெடுமாடச் செப்புக்
குடம்போல வானுயரும்; குளிர்ந்துவரும் காலை! 10



---

முன் காட்டிய நூற்பாவில் கூறிய எண்சீர் விகற்பங்களுள் இஃது ஒருவகை விகற்பம். காய்ச்சீர் மூன்றும், தேமாச்சீர் ஒன்றும் புணர்ந்து இரட்டிய எண்சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்.

# 11. இரவு



அந்தியிலே மேற்றிசையில் தொடுவானப் பரப்பில்
அழகூட்டும் முகிலினங்கள்; அடர்ந்தபெரு மலைகள்
செந்தீயில் வெந்தவியும்; சிலுசிலுக்கும் குளிர்கால்;
சிற்றோடை சலசலக்கும்; திசைமறையும் பரிதி;
பொந்திருந்து குரல்கொடுக்கும் கூகையினம்; அலர்ந்த
புதுப்பூக்கள் மணம்பரப்பும்; புள்ளடையும் புதரில்;
மந்தைமணி ஒலிகேட்கும்; குளம்படிந்த எருமை
வந்தடையும் கொட்டகைக்கு; வந்தடையும் இரவே ! 1

தாரிட்ட திரையாகும் தலைமீது விரிவான்;
தழைமரத்தில் பகலெல்லாம் ஒளிந்திருந்த பறவை
கூரிட்ட வாய்திறந்து குரல்காட்டிக் குளிர்நீர்க்
குளம்நோக்கி இணையிணையாய் இறகடித்துக் குறுகும்;
வேரிட்ட குண்டுபலா வெடித்திட்ட வகைபோல்
விண்மீன்கள் கருவானில் அங்குமிங்கும் கிளம்பும் ;
ஊரிட்ட இருள்கிழிக்கும் விளக்கெல்லாம் அறிஞர்
உரையொக்கும்; ஊரடங்கும் ஓடிவரும் இரவே ! 2

மலையருவி முழவார்க்கும்; வட்டமிடும் துரிஞ்சில்;
வாயிலிலே மணம்பரப்பி வந்தடையும் குளிர்கால்;
இலையுதிரும்; கொடிமுல்லை நுணாப்பூக்கள் மலரும்;
இல்லத்து நீள்வாழை படபடக்கும்; அழைக்கும்;
குலையுதிரும் முதிர்ந்தபழம்; குளம்கூம்பும் மலர்கள்;
கொட்டைகையில் கால்நீட்டி வைக்கோலை எருமை
தலைநீட்டி இழுக்கின்ற மெல்லோசை இரவில்
தனிஇனிமை ; தனிஇனிமை! தடித்துவரும் இரவே! 3

வீட்டிடையில் ஒளியடங்கும்; மக்களொலி அடங்கும்;
விரிகடலில் பேரலைகள் கரைமோதி அடங்கும்;
கூட்டிடையில் இசையடங்கும்; வண்டடங்கும் மலரில்;
குயிலடங்கும் பழத்தோப்பில்; மயிலடங்கும் புதரில்
காட்டிடையில் விலங்கடங்கும்; கலையடங்கும் பிணையில்;
காரெருமை கொட்டைகையுள் கால்நீட்டி அடங்கும்;
மேட்டிடையில் வான்பார்க்கும் சிறுகுடிசை உழவர்
வெறுவயிற்றுப்ப சியடங்க அடங்கும்கண் ணிமையே ! 4

ஊருறங்க உறங்காதார் உளரென்ப துரைக்கும்
ஊளையிடும் நரிக்குலமும் நாய்க்குலமும்; குளத்து
நீருறங்க உறங்காத நீள்குன்றத் தருவி
நெளிந்துவரும் பாம்பைப் போல் இழிந்துவரும் இடுக்கில்;
காருறங்க உறங்காரே கண்விழிக்கும் உடுக்கள்;
களவுசெய்வோர் பொருள்காப்போர் காதலிப்போர் இரவில்
ஊருறங்க உறங்காரே; உலகறிந்த நிகழ்ச்சி!
ஒண்கடலும் உறங்காமல் ஓலமிடல் அழகோ? 5

வில்லொத்த புருவத்தார் கன்னியரின் அருகில்
விடிவளவும் விழித்திருக்கும் சிறுவிளக்குத் தனித்தே
பல்லொத்த முருங்கைப்பூ பாய்விரிக்கும் தெருவில்;
பரணேறும் வெண்பூனை; எலியோடிப் பதுங்கும்;
இல்லடங்கா திருக்கின்ற இளங்காளை எருமை
இரவினிலே ஒன்றிரண்டு கட்டுகயி றறுத்தே
கொல்லையிலே பயிர்மேயும்; கொட்டகையைக் குறுகும்;
கொடுமைக்கும் அழிவுக்கும் நீபொறுப்பா இரவே? 6

காக்கைநிற நள்ளிரவே! கதிரில்லா உலகே!
கட்டுடலின் சோர்வகற்றி உயிரூக்கும் மருந்தே!
சேக்கையிலே கண்மூடிச் சீராட்டும் திருவே!
செயல்மறக்கும் உடல்மறக்கும் இடம்மறக்கும் இனிமைப்
போக்களிக்கும் நற்றாயே! உனையாரே விரும்பார்?
பொதுமையெனப் புகல்கின்றார்; ஆனாலும் உனைப்போல்
காத்தளிக்க வல்லாரோ? வேற்றுமையைக் களைந்தே
கைகொடுக்கும் நற்றுணையே! வாழியகார் இரவே! 7

விண்ணெழுந்த மீனினத்தை, விடிவெள்ளி நிலவை,
வெறிக்காற்றில் தேய்ந்தாடி மலைச்சாரல் விளைந்த
கண்ணெழுந்த நீள்முங்கில் பெருந்தீயை அறிவோர்
கண்டார்கள்; இருள்கிழிக்கக் கண்டாரே விளக்கை;
மண்ணெழுந்த உயிரினத்தின் சிந்திக்கும் அறிவை
வாழ்த்துகிறேன்; வளரட்டும்! ஆனாலும், உலகில்
எண்ணெழுந்த பல்கோடி ஆண்டுகளாய் இரவே
இருக்கின்றாய்; கன்னியைப்போல் இருக்கின்றாய் நிலைத்தே! 8

கடைந்தெடுத்த தந்தக்கால் கட்டிலின்மெல் லணையில்
கட்டவிழா முல்லைமலர்ப் பாயலின்மேற் பரப்பில்
அடைந்திருந்தே உனைமறந்தே அன்பாற்றில் மிதந்தே
அகமகிழ்ந்த காதலர்கள் கண்டிருப்பாய் இரவே!
உடைந்தமனத் துயருற்றோர் உறக்கமின்றிப் புரள
ஊமையைப்போல் இருப்பாயோ? விளக்குவையோ உரையை?
அடையிருளே! நீ இன்றேல் உயிரினங்கள் அமைதி
அடையாவே! நல்வாழ்வும் அடையாயிவ் வுலகே! 9

கோட்டான்கள் உன்படையோ? குளிர்காற்றுக் கொடியோ?
குன்றங்கள் உன்னரசின் நீண்டநிலப் பரப்போ?
காட்டாறு மும்முரசோ? கருவான உடுக்கள்
கருவூலப் பொன்னாமோ? முளைத்துவரும் நிலவு
தீட்டாத கூர்வாளோ? வெள்ளிமுடி மணியோ?
செங்கோலோ முல்லைமலர்? செவ்வல்லிக் குடையோ?
நாட்டரசும் உன்னரசின் கீழ்ப்பட்ட அரசே!
நல்லிரவே! நீவாழி! நீவாழி நிலைத்தே! 10



காய்ச்சீர் மூன்றும் புளிமாச்சீர் ஒன்றும் புணர்ந்திரட்டி வந்த எண்சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம். முன்னைய எண்சீர் விருத்தத்துள் கூறப்பெற்ற விகற்பங்களுள் இஃது ஒரு வகையாகும்.

# 12. அருவி



தேன்நு கர்ந்திடும் வண்டுகள் தழைத்த
செடியில் மொய்த்திடும்; செவிக்கிசை அளிக்கும்;
மான்கள் பாய்ந்திடும்; மணிக்குரல் புறவு
மரத்தில் தங்கியே இணையினை அழைக்கும்;
ஏனல் கொய்பவர் இரைச்சலுக் கடங்கி
எழுந்து மாமயில் பதுங்கிடும் மலைமேல்;
வானில் தோன்றிய கூன்பிறை மதிபோல்
வந்து தோன்றினை! வாழிநீ அருவி! 1

அல்லும் நீள்பகல் அருகிய ருகியே
அடர்ந்த சாரலில் மெல்லநீ தவழ்ந்து
கல்லும் தேய்த்தனை; பாய்ந்து மேல் வழிந்து
கடந்து வந்தனை மாமலை அருவி !
சொல்லில் வல்லவர் பேருரை நயம்போல்
தொடர்ந்து வீழ்ச்சியாய் மாறினாய்; குளிர்நீர்ச்
செல்வம் தந்திடும் மின்வளம் அளித்தே
செழிக்கச் செய்தனை ! வாழ்த்திடும் உலகே ! 2

கலைந்த கூந்தலை ஒத்திடும் முகில்கள்
கவிழ்ந்த சாரலில் தழைத்துந ழுவியே
மலைக டந்தனை; ஓடையாய்ப் பிரிந்து
வந்து சேர்ந்தனை; முல்லையில் புகுந்து
குலைகி டந்தநீள் வாழையைக் கரும்பைக்
கொடுக்கும் நீள்வயல் மருதமே சிறக்க
அலைகி டந்தமா அணையினுள் அடங்கி
அற்ற காலமும் வயல்விளைத் தனையே! 3

செந்நெல் மாபலா வாழையும் கரும்பும்
செழிக்கச் செய்தனை செய்தனில்! மருதக்
கன்னல் தீமொழிக் கன்னியர் முகத்தைக்
காட்டச் செய்தனை தாமரை மலரில்;
பொன்வி ளைத்திடும் உழவரின் தொழிலில்
பொங்கு மெல்லிசை அருவியே! அடடா!
என்ன சொல்லுவேன்! கிள்ளையும் குயிலும்
என்று கற்றன உன்னிடம் உரையே? 4

காடு மேடுமண் கடந்தனர் உனது
கால்க டந்தவ ழித்துணை அடைந்து;
வீடு கண்டனர்; விளைநிலம் விளைத்து
விளைவு கண்டனர்; வீரமும் கொடையும்
மாட கோபுர மாநகர் மருங்கில்
வாழும் மக்களும் உன்வழி நடந்து
நாடு கண்டனர்; நன்னெறி வகுத்து
நலமும் கண்டனர்; வாழிநீ அருவி! 5

இரைத்து வந்தனை சாரலில் அருவி!
இழிந்து வந்தனை; ஓடையில் கலந்தே
நுரைத்துச் சென்றனை; நுழைந்தனை நதியுள்;
நூறு காதமும் உன்வழித் தடுப்பைக்
கரைத்து வந்தனை; கால்களாய்ப் பிரிந்து
காத்து வந்தனை மக்களின் உயிரை;
திரைத்து வாழ்ந்தனை நீள்கடல் புகுந்து
செல்வம் தந்தனை; வாழிவா ழியவே! 6

உன்னில் எத்தனை எத்தனை கலங்கள்?
உன்னில் எத்தனை எத்தனை படகு?
பொன்னும் மாமணிப் பொருள்களும் பெரிய
பொதியும் தாங்கியே செல்வதை அறிந்தேன்;
மன்னர் ஆட்சியை மக்களின் அரசை
வாழ வைப்பதும் நீயென உணர்ந்தேன்;
என்ன சொல்லுவேன் உன்னரும் சிறப்பை!
இனிய பாடலுக் கீடெனல் முறையோ? 7

கோடி கோடியாய்க் கொட்டியும் விலகாக்
கொல்லும் நோயினால் நல்லுடல் மெலிய
வாடி வாடியே வருந்திய உயிர்கள்
வந்து மூழ்கியே நலம்பெறல் அறிந்தேன்;
காடு தாண்டியே நீள்மலை யிடையே
கன்னிச் செந்தமிழ் போலநீ நிலைத்து
நாடு தாண்டியே வருபவர் எவர்க்கும்
நல்கும் மாமருந் தெங்கறிந் தனையோ? 8

உன்னில் தோன்றிய மின்விசை யதனால்
ஊரில் தோன்றிய இருள்கடிந் தனையே!
செந்நெல் நீள்வயல் நீரினை இறைத்தாய்;
சிறிய நற்றொழிற் சாலைகள் இயக்கிப்
பொன்வி ளைத்தனை! புதுப்புதுப் பொருள்கள்
புவிக்க ளித்தனை! உன்னரும் புகழை
என்ன கூறுவேன்! அருவிநீ இலையேல்
ஏற்றம் கண்டிட இயலுமோ உலகே? 9

அள்ளி யள்ளியே மக்களுக் களித்த
ஆன்ற வள்ளலும் அழிந்தனர்; அறிவேன்!
வள்ளல் வாரியே வழங்கிய பொருளும்
வற்றிப் போனதும் அழிந்ததும் அறிவேன்!
கொள்ளக் கொள்ளவும் குறைவுறா தளிக்கும்
குன்றம் சூழ்மலை அருவியே! உனது
வெள்ள நீரினை வழங்கியும் குறையா
வீறு பெற்றவர் உலகினில் இலையே! 10



---

*“ஆதி மாவொடும் கூவிளம் விளமா*
*ஆகு மாயரை யடியிருங் குழலே !”*

என்னும் ‘விருத்தப் பாவியல்’ விதிக்கேற்ப அமைந்த கழிநெடில் ஆசிரிய விருத்தம். முதலில் குறியமா சீரும், கூவிளமும், விளமும், மாச்சீரும் புணர்ந்திரட்ட வந்துள்ளமை காண்க.

